# சிறுவர்களுக்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

ஆருமில்லா ஊரில் அசுவமேதயாகம் செய்கிறது.—அசுவமேத யாகம் செய்யவேண்டுமாகில்யாக தீக்ஷிதனாக இருக்கும் அரசன் சாஸ்திரத்திற் கூறியபடி ஹோமாதிகள் செய்தபின்னர் தகுந்த அலங்காரங்கள் செய்து ஓர் குதிரையைப் பூப்பிரதக்ஷிணம் செய்யும்படி விடவேண்டும். அதன் பின்னரே அநேகம் வீரர்களைச் செல்லவிடவேண்டும். இந்தக் குதிரை தன் முகபடத்தோடு எங்கே வேண்டுமானாலும் திரிந்துகொண்டுவரும். அந்த முகபடத்தில் இன்ன ராஜாவின் அசுவமேதக்குதிரை என்று எழுதியிருக்கும். இதைக் கண்டதும் வழியிலிருக்கும் ராஜ்யாதிபதிகள் இந்தக் குதிரையைப் பிடித்துக் கட்டிவிடுவார்கள். அவர்களைக் குதிரை பின்வரும் வீரர்கள் யுத்தத்தில் தோற்க அடித்துத் தமது ராஜனது மேன்மையை அங்கீகரிக்கும்படி செய்யவேண்டும். இவ்வாறு பிடித்துக் கட்டாத அரசன்தான் இவ்வீரரது அரசன் ஸ்நேஹிதன் அல்லது அவனைவிடத் தாழ்ந்தவன் என்று அங்கீகரிக்கவேண்டும். இவ்வாறு ஸகல அரசர்களையும் ஜயித்த பின்பு குதிரை திரும்பிப் புறப்பட்ட இடம் வர, அதை விடுத்த அரசன் எல்லா அரசர்களையும் வைத்துக் கொண்டு தன் யாகத்தை நடத்தவேண்டும். ஆகவே அசுவமேதயாகம் செய்வதற்குப் பலவான்களான ஸகல ராஜாக்களையும் ஜயித்தல் வேண்டும். இது எளிதான காரியமல்ல.

இதனால் அசுவமேதயாகம் செய்வது என்றால் அஸாத்யமான பெரிய காரியத்தை அநேக விரோதிகளால் தடுக்கப்பெற்றும், அவர்களை எல்லாம் அடக்கிவிட்டு மிகுந்த ஸாமர்த்தியத்துடன் செய்தல் என்ற பொருளில் இப்பழமொழியில் உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது என்பது தெரியவரும். இந்தப் பழமொழிக்கு 'தடுக்கக்கூடிய எதிரிகள் இல்லாதஸமயம் பார்த்து பெரிய காரியத்தைச் செய்து முடிப்பதாக வீணபெருமை பேசுவது' என்பது பொருள்.

இப்பழமொழியின் பொருள் புராண கதைகளில் அநேகர் நடத்தையில் நன்றாக வெளிவருவதைக் காணலாம். உத்தரன் கௌரவ ஸேனையை எளிதில் வென்றுவிடுவதாகவும், கர்ணன் அர்ச்சுனனைக் கொன்றுவிடுவதாகவும், இராவணன் பக்கத்து வீரர்கள் எளிதில் ராமஸேனையை ஜயிப்பதாகவும், ஹிரண்யகசிபு ஹரியையும், பௌண்டரீக வாஸுதேவன் கிருஷ்ண பரமாத்மாவையும் கொல்லுவதாகத் தனிமையாக விருக்குங்கால் வீண்பெருமை பேசியதும் இந்தப் பழமொழிக்குத் தகுந்த உதாரணங்கள். 'உத்தரன் ஆரும் இல்லா ஸமயத்தில் அசுவமேதயாகம் பண்ணினது' மிக வேடிக்கையாக விருக்குமாதலின் இங்கு அதை மாத்திரம் எடுத்துக் கூறுவோம்.

பஞ்சபாண்டவர்கள் விராட நகரத்தில் 13-வருஷம் மறைந்து வாஸம் செய்து தமது ஏற்பாட்டின்படி ஒருவராலும் கண்டுபிடிக்கப்படாது, ஒருவருஷ காலத்தைக் கழித்து முடிக்குமுன் அவர்களைக் கண்டுபிடித்து மறுபடி 12-வருஷம் வனவாஸம்,1-வருஷம் அஞ்ஞாதவாஸம் செய்யும்படி அனுப்பவேண்டும்; என்ற எண்ணத்துடன் துரியோதனாதியர் விராட நகரத்தின் மேல்படை எடுத்துவந்தனர். அவர்கள் தமது ஸேனைகளை இருபாகமாகப்பிரித்து ஒருபாதியால் ஒரு நாள் விராடநகரத்து வடபுறத்திலிருந்த பசுக்கூட்டங்களைபிடித்தனர். இங்கு விராடராஜன், அர்ச்சுனன் தவிரப் பாண்டவர் நால்வரோடும் ஸகல ஸேனைகளோடும்வந்து எதிர்சேனைகளைத்தோற்கும்படி செய்த இவர்கள் மறுநாள் பட்டணம் திரும்பி வருவதற்குமுன் துரியோதன ஸேனையின் மற்றைப்பாகம் விராடநகரத்துத் தென்புறமிருந்த மாடுகளைப்பிடிக்க, இந்த ஸங்கதியைக் கோபாலர்கள் நகரம்வந்து அங்கிருந்த விராடராஜன் குமாரனான உத்தரனுக்குத் தெரிவித்தனர். உத்தரன் அப்பொழுது பெண்டுகள் மத்தியில் இருந்தான். இவர்கள் வந்து கூறியதும், 'இந்த கொடியிலேயே கௌரவ ஸேனையை நான் சின்னபின்னமாக்கி விடுவேன். எனக்குத் தகுந்த ஸாரதிமாத்திரம் வேண்டும். அது இல்லாமற் போயிற்றே!' என்று மிகுந்த பரபரப்புடன் பெருமை பாராட்டித் தனக்குத்தகுந்த ஸாரதி ஒருவனைக்கூட வைக்காதுபோன தன் தகப்பனைக் கடிந்துகொண்டான். அப்பொழுது அங்கிருந்த பெண்டுகள் உத்தரன் பராக்கிரமத்தைப் புகழ்ந்து பேச, அவன் தனக்கு உண்டான கர்வ வெறியில் வாயில்வந்தபடி எல்லாம் தன்னைத்தானே புகழ்ந்து பேசிப் பிதற்றத்தொடங்கி விட்டான். அந்த ஸமயத்தில் பிரகந்நளையாகிய அர்ச்சுனன் ஸாரதியாகவந்து அமர, உத்தரன் மிகுந்த